லும் த்வயாதிகாரத்தில் எடுத்து உதாஹரித்திருக்கிறுர். இதுபற்றி பெரியோர்களிடம் விண்ணப்பித்துக் கொண்டதில் "இந்த சுலோகம் தயாசதகத்தின் ஆரம்பத்தில் இருந்திருக்கக்கூடும்" என்றருளிச் செய்தார்கள். ஸ்தோத்ரத்தில் விஜ்ஞாபித்துக் கொள்ளும் தயா (கருணு) விஷயமாகவே இந்த ச்லோகத்திலும் அதன் ஸ்வரூப ஸம்ஸ்தவங்களைப்பற்றி ஸாதிக்கிறுர் ஆகவே இது பொருத்தமாயுள்ளது. மேலும் தயாசதகத்தில் ஆரம்பத்தில் அநுஷ்டுப் சுலோகங்களே. இதுவும் அனுஷ்டுப். இதனுலும் இதுஸரியே. வேறே சிலர் அருளிச் செய்ததாவது......... அச்சு ஏற்பட்டு மூத்ரணம் செய்ய ஆரம்பித்தபோது கிடைத்தவை போக மீதமுள்ளவை இன்றும் ப்ராசீனவித்வத் திருமாளிகைகளிலும் சில கோசாகாரங்களிலும் கிடைக்கக்கூடும் .. தேடிக்காண வேண்டியுள்ளது. இதனுல் நாம் அறிவது யாதெனில் பலவிஷயங்களைப்பற்றி பல ஸந்தர்ப்பங்களில் பலக்ரந்தங்களை ஸ்ரீஸ்வாமி அருளிச் செய்துள்ளாரென்பதும், அச்சில் வெளிவராமல் ப்ராக்ருதநிவேதிகா, தசார்த்த கோசம், சில்பார்த்த ஸாரம் முதலியவற்றைப் போல் மேலும் பலசாஸ்த்ரங்களில் பலவுள்ளன வென்பதும், வித்யாவ்யஸனிகள் ஆர்வமுடன் தேடினுல் என்றோ இவையும் கிடைக்கு மென்பதுமாகும்."

தேடிக் கண்டு பிடிக்க வேண்டிய தேசிக திவ்யக்ரந்தங்கள் பலவுண்டு -என்பதையே இந்த வித்வான் புந: புந: எழுதி முடித்திருக்கிறுர்.

தேடிக் கண்டு பிடிக்கும் விஷயத்தில் நாம் ஏதும் முயற்சி கொள்ளவில்லை. முயற்சி கொண்ட பண்டிதர்கள் சிலர் சேகரித்து அனுப்பியதை நாம் முத்ரணம் செய்து வருகிறோமத்தனை. ஸூக்திஸந்நிவேசங்களைக் காணும் போது ஸ்வாமி தேசிகன் தவிர வேறு எந்த வித்வானுலும் அதிகம்பீரஸந்தர்ப்பமான இந்த க்ருதி இயற்ற முடியாதென்று பலப்ராஜ்ஞர்கள் ஆழ்ந்து நோக்கித் தெரிவிக்கிறுர்கள்.

முடிவாக நம்முடைய விஜ்ஞாபன மிவ்வளவே; சப்தார்த்த பௌஷ்கல்யத்தாலே தேசிக திவ்யஸூக்தியே யென்று அறுதியிடத் தக்கதாகவுள்ள இந்த தத்வார்த்த ரத்னுவளிக்ருதியில் அஸம்பத்தமான விஷயம் இருப்பதாகத் தோன்றினுல் அதை ப்ராமாணிக பண்டிதர்கள் நிந்தாபரிஹாஸ லவலேசமுமின்றிக்கே ச்லோ* ரூபமாகவே வெளியிடலாம். .... .... .... ....

---

# மார்கழித் திங்கள் காலக்ஷேபம்

*16-12-69* செவ்வாய்க்கிழமையன்று தனுர்மாஸத் தொடக்கமாதலால் நமது பத்ராதிபர் (**P.B.A** ஸ்வாமி) அன்று முதல் 13-1-1970 போகிப்பண்டிகை வரையில் திருப்பாவை ப்ரவசனர்த்தமாக சென்னை மாநகரில் உப்பட்டூர் ஆழ்வார் செட்டியார் ராமாநுஜ கூடத்தில் எழுந்தருளியிருப்பர். தினப்படி மாலை 6 மணி முதல் 8மணிவரை உபந்யாஸம் நடைபெறும். அந்த 30நாளும் ஸ்வாமிக்கு விலாஸம் கீழ்க்கண்டவாறு;—

Sri. P. B. ANNANGARACHARYA

48. Govindappa Naick Street, Madras.—1

# மிகச் சிறந்த ரத்னத்தை யிழந்தோம்

சென்னை கீழ்ப்பாக்கத்தில் ஸ்ரீமதுபயவே. V. ராஜகோபாலாசாரியர் ஸ்வாமி யென்று ஸுப்ரஸித்தராக எழுந்தருளியிருந்த அட்வகேட் ஸ்வாமி 14-11-69 வெள்ளிக்கிழமையன்று காலையில் தமது திருமாளிகையில் திருநாடலங் கரித்தாரென்னும் செய்தியைத் தெரிவிக்க மிகமிக வருந்துகிறோம். ஸ்வாமிக்கு வயது 77 ஆனாலும் லோகோபகாரார்த்தமாக இன்னும் பலவாண்டுகள் இந்நிலவு லகத்தை அலங்கரித்திருக்கவேண்டியவர். ஸ்வாமி ஸாதாரணமான அட்வகேட்டல் லர். மஹாமேதாவி, மஹாவிவேகி, மஹாசதுரர் என்று பல ஜட்ஜ்களாலுங் கூடக் கொண்டாடப்பட்டு விளங்கியவர். ஸ்வாமியால் பிரபல தண்டனைகளிலிருந்து விடுவிக்கப்பட்டவர்கள் பல்லாயிரவர். எந்த வியவஹாரத்திலும் ஸ்வாமி வெற்றி தவிர தோல்வியடைந்தது கிடையவேகிடையாதென்று அட்வகேட்டுகள் பலரும் சொல்லக் கேட்கிறோம். தப்பான விவகாரங்களில் ஸ்வாமி தலையிடமாட்டா ரென்று ஸகலஜட்ஜ்களுக்கும் இவரிடத்தில் நம்பிக்கையும் மதிப்புமுண்டு.

இந்த ஸ்வாமியோடு நெருக்கம் அடியேனுக்கு நாற்பது வருஷகாலமாக வுண்டு. சென்னைத் தொண்டமண்டலம் ஸ்கூல்ஹாலில் அடியேனுடைய உபந் யாஸம் ஆரம்பித்த காலத்தில் தம்மை இன்னாரென்று காட்டிக் கொள்ளாமலே சில வருஷங்கள் ஒரு மூலையில் வீற்றிருந்து போவராம். இதைத் தாமே பல கால் சொல்லுவர். பஹுச்ருதர். பரமரஸிகர். தொண்டமண்டலம் ஸ்கூல்ஹாலில் ஏறக்குறைய இருபத்தைந்து வருஷகாலம் நடந்து வந்த ப்ரவசன கோஷ்டியில் இந்த ஸ்வாமி ஸேவை ஸாதியாத நாட்கள் நினைவுக்கு வரவில்லை. அவ்விடத்தில் விஷ்ணுபாரம்யத்தை தாராளமாகச் சொல்லுவதற்கு இடையூறு நேர்ந்த ஸந் தர்ப்பத்தில் இந்த ஸ்வாமியே அடியேனை அந்த ஸபையிலிருந்து விலகச் செய்து, ஸத்கால க்ஷேபஸபையென்று புதிய ஸபையொன்று வேறு ஹாலில் ஏற்படுத்தி அதற்குத் தாமே பிரஸிடெண்டு பதவியை வஹித்திருந்தார்.

ஸ்வாமிக்கு இரு திருக்குமாரர்களுண்டு. மூத்தவர் பதினைந்து வருஷங் களுக்கு முன்னமே அகாலம்ருத்யுவையடைந்து விட்டார். இளையகுமாரர் இப் போது ப்ரதிஷ்டிதராய் விளங்கிவருகிறார். இவரே சரமக்ரியையைச் சிறப்புற நடத்தினார்.

திருக்கண்ணபுரம் ஸமீபத்தில் உபய வேதாந்தபுரம் என்று ப்ரஸித்தமான அக்ரஹாரத்தில் ஜனித்து ஸதாசார்யஸம்பந்தம் பெற்றுப் பரம விலக்ஷணராயும் ஸம்ப்ரதாய ப்ரதீபமாயும் விளங்கின இந்த ஸ்வாமியின் ஸ்தானத்தைப் பூர்த்தி செய்ய வல்ல மஹானை எம்பெருமானேயறிவன். .... .... .... *

# மற்றொரு ரத்னமும் மறைந்தது.

சென்னை வைச்ய ஸமுதாயத்தில் பிரபல வியாபாரியும் பரம ஆஸ்திகரும் மிகச்சிறந்த தர்மிஷ்டருமான ஸ்ரீமான் **Curzon Co.** சேஷாசலம் செட்டியார் **B.A.B.L** அவர்கள் 22-11-69 சனிக்கிழமையன்று ஊட்டியில் இதய கோசக் கோளாறினால் அநாயாஸமரண மடைந்தார். பல தருமஸ்தாபனங்களில் நிர்வாஹம் கொண்டி ருந்த இப்பெரியாருடைய மறைவுக்கு சென்னை மாநகரம் முழுவதும் வருந்து கின்றது.

# பக்தி ப்ரதாநமா? ஆசாரம் ப்ரதாநமா?

உலகில் சிலர் வர்ணாச்ரமாசாரங்களில் ஜாகரூகர்களாயிருப்பார்கள்; ஆனால் அவர்களுக்கு பகவத்பக்தி இல்லை யென்னும்படியாயிருக்கும். சிலர்க்கு பக்தி தலை சிறந்து விளங்கும்; ஆனால் அவர்களுக்கு வர்ணாச்ரமாசாரங்களில் சிறிதும் ச்ரத்தை இல்லாமலிருக்கும். இவ்விரண்டு வகுப்பில் எது சிறந்தது? என்கிற விசாரம் ப்ராப்த மாயிருக்கின்றது. சாஸ்த்ரங்களை ஆராய்ந்து பார்த்தாலோ ஓரிடத்தில் வர்ணாச்ர மாசாரங்களுக்கு ப்ராதாந்யமும், மற்றோரிடத்தில் பக்திக்கு ப்ராதாந்யமும் காண கிறது. எங்ஙனே யென்னில் "ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ் தாமுல்லங்க்ய வர்த்ததே, ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவ:" என்கிற பக வத்வசனம் ஸுப்ரஸித்தமானது. இதன் பொருள் என்ன வென்றால், வேதங்களும் அவற்றின் உபப்ரும்ஹணங்களும் ஸாக்ஷாத் என்னுடைய கட்டளையே யாகும்; அப்படிப்பட்ட ச்ருதிஸ்ம்ருதிகளை மீறி நடப்பவன் என்னுடைய ஆஜ்ஞையை உல லங்கனம் செய்தவனாதலால் எனக்கு த்ரோஹம் செய்தவனாகின்றான். அவன் என் பக்கலவ் பக்தி பூண்டிருந்தாலும் வர்ணாச்ரமாசாரவிரஹித னென்னுங் காரணத் தினால் அவைஷ்ணவனேயாவன் என்பதாம். ஆக இந்த பகவத் வசனத்தினால் வர் ணாச்ரமாசாரமே முக்கியமென்றும், பக்தி முக்கியமன்றென்றும் விளங்கிற்று. வர் ணாச்ரமாசாரவதா புருஷேண பர: புமாந், விஷ்ணுராராத்யதே பந்தா நாந்யஸ் தத்தோஷகாரக:" என்று பல வசனங்களும் இதற்கு உபஷ்டம்பகமாகக் காண கின்றன.

இனி பகவத் கீதையில் கீதாசார்யன் ஸாக்ஷாத்தாக அருளிச் செய்வது பாரீர்; அதில் ஒன்பதாமத்யாயத்தில் (30) ["அபி சேத் ஸுதுராசாரோ பஜதே மாம் அநந்யபாக், ஸாதுரேவ ஸ மந்தவ்யஸ் ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ:"]

என்று, ஆசாரத்திற்கு அப்ராதாந்யமும் பக்திக்கு ப்ராதாந்யமும் கொடுத்துப் பேசப்பட்டிருக்கிறது. இந்த ச்லோகத்தின் கருத்தை நம்முடைய பாஷ்யகாரர் மிக வினிதாக விவரித்தருளுகிறார். அந்த பாஷ்ய ஸூக்தியையே மொழிபெயர்த்தெழுது கிறோம்; அந்தந்த ஜாதியில் பிறந்தவர்களுக்கு இன்னது செய்யத்தக்க தென்றும் இன்னது விலக்கத் தக்க தென்றும் சாஸ்த்ரங்களிலே விதிநிஷேதங்கள் காணப்படு கின்றன; அவற்றை அநுவர்த்தியாமல் கடந்தாயினும் யாவனொருவன் நம்மிடத் திலே ஸ்வயம்ப்ரயோஜனமான பக்தியைச் செலுத்துகிறானோ அவனை ஸ்ரீவைஷ்ண வாக்ரேஸரனாக நினைத்து பஹுமானிக்கவேணும். ஏனென்றால், [ஸ: ஸம்யக் வ்யவ ஸிதோ ஹி.] இந்த பரமபக்தனுடைய அத்யவஸாயம் மிகச் சிறந்தது. ஸ்ரீமந்நாரா யணனையே தனக்குத் தெய்வமாகவும் ஆசார்யனாகவும் தோழனாகவும் பரமபோக்ய வஸ்து ஸமூஹமாகவும் கொள்ளுகையாகிற அத்யவஸாயம் பிறர்க்கு அரிதாய் இவனுக்கே எளிதாய் இருக்கின்றதன்றோ. இப்படிப்பட்ட அத்யவஸாயம் இவ னுக்குண்டென்பதை அநந்ய ப்ரயோஜநமாக இவன் செய்யும் நிரந்தர பஜனத்தைக் கொண்டே அறியலாம். இப்படிப்பட்ட பக்தியுக்தனிடத்திலே ஆசார லோபம் இருந் தால் அதுவொரு பெரிய விஷயமாகக் கொள்ளத் தக்கதன்று; அது மிகச் சிறுவிஷ யமே யாதலால் அது கொண்டு அநாதரியாமல் விசேஷித்து பஹுமானிக்கத் தக்க வனே—என்பது நம் பாஷ்யகாரருடைய பாஷ்ய ப்ரக்ரியை.

முதலில் உதாஹரித்த * மத்பக்தோபி ந வைஷ்ணவ:* என்ற வசனத்திற் கும் *ஸாது ரேவ ஸ மந்தவ்ய:* என்ற இந்த வசனத்திற்கும் பரஸ்பர விரோத மிருப்பதாகத் தோன்றக்கூடும். பக்தியும் ஆசாரமும் ஸமப்ரதாநமாகையாலே * ந ஹி நிந்தா ந்யாயத்தாலே விரோத சமநம் பண்ணலாமென்று சிலர் சொல்லுவர்.

# ஸ்ரீ பதரிகாச்ரமத்தில் அபூர்வ ப்ரம்ம யஜ்ஞும்

## ஸ்ரீ ஸ்ரீமந் நாராயணராமானுஜ ஜீயர் ஸ்வாமியின் அத்புதஸங்கல்ப பூர்த்தி,

(ஸ்ரீமான் A. ராமாநுஜாசாரியர், B. A., புது டில்லி.)

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யராய் ஜகத் விக்க்யாத வைபவசாலியாய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமந் நாராயண ராமானுஜ ஜீயர் ஸ்வாமிகளை அறியாதாருண்டோ? நாட்டின் நாலு பாகங்களிலும் வேத தர்மப் பிரசாரம் செய்துவரும் உத்தமாச்ரமிகளில் அக்ரேஸரராக விளங்குபவர் நம் ஜீயர். ஸ்வாமி கன்னியாகுமரியிலிருந்து ஹிமாசல பர்யந்தம் முக்கிய நகரங்களிலெல்லாம் ஸ்ரீராமக்ரதுவும் ஸ்ரீராம ஸ்தம்ப ப்ரதிஷ்டையும் செய்துள்ளாரென்பது ஸுப்ரஸித்தம். சென்ற வாண்டில் திருமலையில் திருவேங்கடமுடையான் திரு முன்பே நம் ஜீயர் ஸ்வாமி செய்தருளின 108-வது க்ரது விசேஷத்தின் பெருமை உலகம் பரவியுள்ளது. எம்பெருமான் இப்பரம ஸாத்விகரின் மூலம் ஒரு அபூர்வ ப்ரஹ்ம யஜ்ஞும் செய்விக்க ஸங்கல்பம் கொண்டான். அது கடந்த செப்டம்பர்மீ 18 தேதியிலிருந்து 25 தேதி வரை தேவ பூமி ஹிமாலயத்தின் பிரதான க்ஷேத்திரமான பதரிகாச்ரமத்தில் ப்ராப்தமாயிற்று. சதுர்வேத பாராயணமும். வேத மந்திரங்களின் ஆஹுதி மூலம் வேள்வியும் 'நபூதோ, ந பவிஷ்யதி' என்னும்படி நடந்தேறியது.

### பதரிகாச்ரமத்தில் ப்ரஹ்ம யஜ்ஞும் ஏன்?

பரதத்வமான ஸ்ரீமந் நாராயணனைப் பற்றியே வேதங்கள் பெரும்பாலும் பேசுகின்றனவென்று கற்றறிந்த பெரியோர் கூறுவர். வேதப் பொருளான திருவஷ்டாக்ஷரமந்திரத்தை ஸ்ரீமந் நாராயணன் தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று உபதேசித்த பரம பாவன ஸ்தலம் வதரி. வதரியுள்ளான் இப்படியே சேவை சாதிப்பது இதற்குப் போதுமான சான்று. சன்னிதிக்குச் சில மைல் தூரத்திலுள்ளது "வ்யாஸ குகை", அங்குதான் வ்யாஸ முனிவர் அநாதியான வேதத்தை 'ருக், யஜுஸ், ஸாம, அதர்வணம் என்று நான்கு பாகங்களாகப் பிரித்து உலகத்திற்கு வழங்கினர். வேதப் பிரிவு செய்த இந்த இடத்தில் சதுர்வேத பர்வதமும், அவைகளிலிருந்து பெருகும் சதுர்வேத நீர்வீழ்ச்சிகளும், வேத அவதார ஸ்தல ஸ்மாரகமாக அமைந்திருக்கின்றன. 'வ்யாஸ குகை'யில் தான் பிரம்ம சூத்திர ரசனைகளும், மகா பாரதம், (ஸ்ரீபாகவதம்,) அஷ்டாதச புராணங்கள் முதலியன பட்டோலை செய்யப்பட்டனவென்று பெரியார் கூறி வருகிறார்கள். இக்காரணங்களால் ப்ரஹ்ம யஜ்ஞுத்திற்கு பதரிகாச்ரமத்தைவிட ச்ரேஷ்டமான வேறு இடம் என்ன இருக்கமுடியும்? இந்த ஸ்தல விசேஷத்தை மணவாளமாமுனிகளின் திருவாக்கால் அனுபவிப்போம்;—

"வேத ஸாரமான இத்தை ஸ்வயமேவ எடுத்து, *அமரர் பெரு விசும்பருளும் பேரருளாளன்—வதரியாச்சிரமத்துள்ளான்* என்கிறபடியே நித்ய ஸூரிகளுக்கு போக்யமாய் பரமாகாச சப்த வாச்யமான பரமபதத்தைக் கொடுப்பதான நிர்ஹேதுக க்ருபையாலே, *நர நாரணனுயுலகத்தற நூல் சிங்காமை விரித்

தவன்* என்கிறபடியே ஸ்ரீபதரிகாச்ரமத்திலே‡நரநாராயண ரூபேண அவதரித்துத் தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று ஸ்வரூப சாஸ்த்ரம் ஸங்குசித மாகாமல் உபதேசாநுஷ்ட்டானங்களாலே விஸ்த்ருதமாம்படி பணணிற்று.'' [ஆசார்ய ஹ்ருதய (16) வியாக்கியான ஸ்ரீஸூக்திகளிவை.]

## ப்ரஹ்ம யஜ்ஞத்தின் நோக்கம்

ஸ்ரீ ஜீயர் தம்முடைய ப்ரவசனங்களில் ப்ரஹ்ம யஜ்ஞத்தின் நோக்கத்தை விளக்கியுள்ளார். பதரிகாச்ரமத்துக்கும் வேதத்திற்கு முள்ள நெருங்கிய உறவை மேலே குறிப்பிட்டோம். வ்யாஸ பகவான் உலகத்துக்களித்திருக்கும் ஞான பொக்கிஷங்களுக்கு உபகார ஸ்மிருதியாக இந்த ப்ரஹ்ம யஜ்ஞம் அமைந்த தென்பதாம். வேதியர் பிரதிதினம் வேதம் ஓதி ப்ரஹ்ம யஜ்ஞம் நடத்தவேண்டு மென்ற நியமமுண்டு. ஆனால் பல காரணங்களால் இது ஸந்தியாவந்தன க்ருத் யத்தில் உச்சரிக்கப்படும் வேத வாக்யங்களோடு நின்றுவிட்டது. இந்த குறைப் பாடுக்கு ப்ரஹ்ம யஜ்ஞம் ஒரு ஸமுசித ப்ராயச்சித்தமாகக் கொள்ளலாம். இப் பிரபஞ்சத்தில் சாந்தியும் மங்கலமும் நிலவவேண்டும்; தர்மம் செழித்தோங்க வேண்டும்; ஜனங்கள் சுபிக்ஷமாக வாழ வேண்டும் என்பதற்காகவும் ப்ரஹ்ம யஜ்ஞம் செய்விக்கப்பட்டது. பொதுவாக வேதம் கற்பதற்கு உத்ஸாஹ மூட்டவும் வேதாதிகாரிகளை கௌரவிப்பதற்கும் ப்ரஹ்ம யஜ்ஞம் செய்யப்பட்டதென்னலாம்.

## அங்குரார்ப்பணம்

யஜ்ஞத்திற்கு நிமந்த்ரிக்கப்பட்ட வேதவித்துக்கள் ஸ்ரீரங்கம், காஞ்சீபுரம், திருமலை, மதுரை முதலிய திவ்ய தேசங்களிலிருந்தும், நெல்லூர் கிருஷ்ணா, கோதாவரீ முதலிய ஆந்திரா ஜில்லாக்களிலிருந்தும் 128-க்குமேற்பட்ட திரு நாமங்கள் எழுந்தருளியிருந்தனர். இவர்களைத் தவிர நூற்றுக்கணக்கான ஆஸ் திகர்கள் மதருஸ்—ஆந்திர பிராந்தங்களிலிருந்து குழுமியிருந்தனர். ஹிமாசலப் பிரதேசங்களிலிருந்து வேத—இதிஹாஸ புராணாதிகாரிகள் பலர் பங்கெடுத்துக் கொள்ள வதரிக்கு வந்தனர். செப்டம்பர் 18-ம் தேதி வியாழக்கிழமை காலையில் உப க்ரமம். பக்த கோடிகளின் ஸௌகர்யத்திற்காகவே ஸ்ரீபதரி நாராயணன் தன் திரு வடி வாரத்தில் 'தப்த குண்டம்' என்ற வெந்நீர் ஊற்றை ஸ்ருஷ்டி செய்திருக்கிறான். யாவரும் அங்கு அநுஷ்ட்டானாதிகளை முடித்துக் கொண்டு "வருந்திரைமணி நீர்க் கங்கையின் கரைமேல் வதரியாச்சிரமத்துள்ளானை" மங்களாசாஸனம் செய்து, அவனதருள் பெற்று, யஜ்ஞத்திற் கென்றே ப்ரத்யேகமாக வந்த விஜயவாடா கஞ்சால. சுப்பநாராயணா பார்ட்டியாரின் தங்க நாதஸ்வர மங்கள வாத்தியங்கள் முழங்க திவ்யப் பிரபந்த அத்யாபகர்கள் வேத வ்யாஸ குகையை நோக்கி ஊர்வல மாகச் சென்றனர். இரண்டு மைல் தூரத்திலுள்ள மாதா மூர்த்தியை தர்சனம் பண்ணி, மானா என்ற கிராமத்திற்குச் சென்றனர். (மானா= நம் நாட்டின் வடக்கில் கடைசி கிராமம். அதற்கப்புறம் சீன எல்லை, திபத்து ராஜ்யம்) இங்குள்ள வ்யாஸ குகையில் விசேஷ ஆராதனங்கள் நடந்தன. பக்கத்திலுள்ள சதுர்வேத பர்வத மும், அவைகளிலிருந்து பெருகும் நீர்வீழ்ச்சிகளும் நான்கு வேதங்களின் பெய ரால் அழைக்கப்படுகின்றன. நீர்த்தாரை ஒவ்வொன்றிலும் ஆசமனம் செய்து

அந்தந்த தாரையின் ஸாந்நித்யத்தில் அந்தந்த வேதத் தொடக்கம் செய்தனர். மங்கள வாத்தியங்கள் முழங்கிக் கொண்டு முன் செல்ல நான்கு வேத பாராயண கோஷ்டிகளும், ஆழ்வார் கோஷ்டியும் அணிவகுத்தாப்போல் தனித் தனியாக பவனிவர எல்லோருக்கும் அக்ரஸ்தானத்தில் ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி அற்புதமான ஸேவை தந்து கொண்டு எழுந்தருளினர், ஆஹா! அக்காட்சியைக் காண சதுர் முகனும் தேவக் கூட்டங்களும் வ்யாஸர் முதலிய முனிக்கணங்களும் அங்குக் கூடினர் என்பதே வேதாதிகாரிகள் பலருடைய மாநஸிகானுபவம். வேத கோஷத்தைச் செவியுற்ற வருண பகவானும் ஆனந்த பாஷ்பம் பொழிந்தனன்.

ஊர்வலம் அஷ்டாக்ஷர க்ஷேத்திரத்தை அணுகியது. ப்ரஹ்ம யஜ்ஞத்துக் கென்றே பதினாயிரம் ரூபாயில் நிர்மாணிக்கப்பட்ட யாகசாலையில் வேத கோஷ்டிகள் ப்ரவேசம் செய்து பிறகு எம்பெருமானார் சன்னிதியில் சாற்றுமுறை ஆனதும் தீர்த்த ப்ரஸாதம் ஸ்வீகரித்தனர். ஷட்ரஸ பக்ஷ்யவர்க்கங்களுடன் ததீயாராதனமும் முடிந்தது. (இங்கு ஒரு விசேஷம். அவரவர்கள் ஆசாரம், ருசி, இவைகளுக்கு அனுகூலமாக போஜன வசதி ஏற்பாடிருந்ததை யாவரும் பாராட்டினர்). இரவு அங்குரார்ப்பணம், ரித்விக்குகள் வரித்தல் முதலிய பூர்வீக சடங்குகள் க்ரமேண பூர்த்தியாயின.

## ப்ரஹ்ம யஜ்ஞ உத்கரடனம்

அடுத்த தினம் காலை யாகாரம்பமாயிற்று. உஷக் காலத்தில் வேதாதிகாரிகள் காலைக் கடன்களை முடித்து, ஸ்ரீ நாராயணனை மங்களாசாஸனம் செய்து, யஜ்ஞ சாலைக்கு எழுந்தருளினர். தனித்தனி குண்டங்களில் நான்கு வேத ஆஹுதிகள் பிராரம்பமாயிற்று. ரித்விக்குகளில் யஜுர் வேதாதிகாரிகளின் எண்ணிக்கை தான் அதிகம். தேசத்திலேயே அதர்வண வேதம் ஓத வல்லவர் மூன்று நான்கு பெயர்கள் தான் உண்டென்று தெரிகிறது, அவர்களில் இருவர் ப்ரஹ்ம யஜ்ஞத்தில் அந்வயித்தனர். வேத பஞ்சாதிகளை ஓதி, ஆஹுதி நடந்து கொண்டிருக்கும்போது வேறொரு பக்கத்தில் ஸம்ஸ்க்ருத பண்டிதர்கள் ஸ்ரீராமாயணம், ஸ்ரீ பகவத் கீதை, ஸ்ரீபாஷ்யம்; ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணங்களிலும், அஷ்டாக்ஷர மந்திர ஜபத்திலும் ஈடுபட்டிருந்தனர். ப்ரதி தினம் ஸ்ரீ கீதை மூன்று ஆவர்த்தி, விஷ்ணு ஸஹஸ்ரநாமம் 12 ஆவர்த்தி, அஷ்டாக்ஷர மந்திர ஜபம் ஒரு லட்சம் தடவை என்ற கணக்கில் நடந்தது. அதே ஸமயம் எம்பெருமானார் மண்டபத்தில் திவ்யப்ரபந்த ஸேவை நிகழ்ந்தது. இப்படியே ஏழு நாட்களும் நிகழ்ச்சி நிரல். வேதாதிகாரிகள் ஸ்மார்த்தர்—ஸ்ரீ வைஷ்ணவர், தென்கலை—வடகலை, தென்னிந்தியர்—உத்தராதிகள் என்ற பேத மனப்பான்மையின்றி "நாமெல்லாரும் (ஒரே) வேத குலம்" என்ற உணர்ச்சியுடன் ஸௌஹார்த்தமாய் ஒத்துழைத்து வேள்வியை வெற்றிகரமாகச் செய்தது மிகவும் பாராட்டத்தக்கதாக விளங்கிற்று. அவ்வழகை நேரிலன்றோ காணவேணும்.

## ஸ்ரீ ஜீயர் ஆச்ரமத்தில் காமதேனு

தினப்படி ஆஹுதியும்-சாற்றுமுறையும் முடிந்ததும் யாவருக்கும் பெருமாள் கண்டருளின வடை-திருப்பணியாரத்துடன் ததியாராதனம்; ஆகந்துகர்களில் பலர் குடும்ப ஸஹிதமாக வந்திருந்தனர். மொத்தம் ஏறக்குறைய 500

பேர்களுக்கு ஒவ்வொரு வேளையும் போஜனம்! இவர்களோடு நின்றுவிட்டதா? வதரி பிராந்தங்களிலுள்ள நூற்றுக் கணக்கான 'பண்டாக்கள்' என்ற புரோகிதர்களுக்கும், ஸ்ரீ பதரிகாச்ரம சன்னிதி அதிகாரிகள்—சிப்பந்திகளுக்கும், கடைக்காரர்கள் உட்பட உள்ளூர்க்காரர்கள் சுமார் 1,000 பேருக்கும் வதரியைச் சுற்றியுள்ள மாணு முதலிய நான்கு கிராம ஜனங்கள் சுமார் 1000 பேருக்கும், யாத்திரிகர்களுக்கு உதவியாகவிருக்கும் நூற்றுக் கணக்கான கூலி வேலைக்காரர்களுக்கும்—முறையே ஒவ்வொரு நாள் பூரி-லட்டு-அல்வா கூடிய வட இந்திய போஜனம் வழங்கப்பட்டது. யஜ்ஞம் நடந்த சமயம் விடாமழை, வதரி போகும் மார்க்கங்களில் மலைகள் சரிந்து ரோட்டுகள் தடைபட்டுவிட்டன. இதனால் யாத்திரிகர்களுக்கு 15, 20 மைல் செங்குத்தான மலைகளை ஒற்றைப் பாதை வழியாகக்கடக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. ரிஷீகேசத்திலிருந்து பதரிநாத் வரை சுமார் 200 மைல் தூரம் ஹிமவானைக் கடந்து சில யாத்ரிகர்கள் செல்வதே ச்ரம சாத்தியமாகவிருக்க, ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு அன்னபானுதிகளுக்கு ஸாமக்ரி வதரிக்குக் கொண்டு சேர்ப்பது என்பது ஒருவருடைய சிந்தைக்கும் கோசரமல்லாததன்றோ? இக்கார்ய விசேஷத்தை நம் ஜீயர் ஸ்வாமி செய்திருந்தாரென்றால் அவருடைய சக்தி விசேஷத்தை என்னவென்று சொல்லுவது! அவ்வமயம் யஜ்ஞத்திற்கு வந்திருந்த பல குடும்பஸ்தர்கள் "இப்போதிருக்கும் சூழ் நிலையில் எப்படி நாங்கள் ஊர் திரும்புவோம்? இங்கு பல நாட்கள் தங்கவேண்டியிருக்கும் போலிருக்கிறதே! போஜனுதிகளுக்கு என்ன செய்வது? என ஏங்கி இருந்தவர்களை நோக்கி, பரமகாருணிகரான ஜீயர் ஸ்வாமி "நீங்கள் இங்கு எத்தனை நாள் இருக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டாலும் பயப்படாதீர்கள்; வேண்டிய உணவுப் பொருள்களுக்கு ஏற்பாடு செய்திருக்கிறேன். சோகிக்க வேண்டாம்" என்று அபயப்பிரதானம் அளித்ததை உயிருள்ள வரை யாரும் மறக்க முடியாது. இச் சந்தர்ப்பத்தில் ஸ்ரீ காஞ்சி உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி முன் ஸ்ரீ ராமானுஜனில் எழுதினது ஞாபகம் வருகிறது. அவர் கூறினார்—

> "எத்தனைபேர்கள் வந்தாலும் ஜீயர் ஸ்வாமியின் குதூஹலம் உள்ளடங்காது. 'ஐயோ! இந்த இடத்றில் இத்தனைபேர்கள் வந்துவிட்டார்களே! எப்படி ஸமாளிப்போம்' என்கிற விசாரம் திருவுள்ளத்தில் ஒரு மூலையிலும் அணுவளவு மில்லாமே, இன்னமும் வாராரோ! என்று குதூஹலங் கொண்டிருக்கும் ஜீயர் ஸ்வாமியின் திருவுள்ளப் பாங்கை நினைக்குங்கால் என்ன சொல்லுவது? என்ன எழுதுவது? ஒன்றுமே தோன்றவில்லை,'

என்பதாக நம் P. B. A. ஸ்வாமி அருளியது அக்ஷரச: ஸத்தியம், ஸத்தியம்.

சரி, இப்படி, அப்போதிருந்த சௌகர்யமற்ற சூழ்நிலையிலும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு போஜன வசதிகள் செய்தரரே நம் ஜீயர்! இது எப்படி சாத்யமாயிற்று அவருக்கு? எங்கிருந்து சாமக்ரிகள கிடைத்தன? கிடைத்தாலும் வதரிக்கு எப்படி கொண்டு சேர்க்கப்பட்டன? இப்படி பல கேள்விகள் எல்லோர் மனதிலும் உதித்தது; உதிக்கும். இந்த ரஹஸ்யத்தைத் தெசிந்துகொள்ள விரும்புவது யாவருக்கும் ஸஹஜம். வஸிஷ்டர் ஆச்ரமத்திலிருந்து காமதேனு நம் ஜீயர் ஆச்ரமத்திற்கு ஓடிவந்துவிட்டதுபோலும்! என்றல்லது வேறொன்றும் சிந்தையில் தோன்றவில்லை.

## ஸ்ரீ பதரீநாராயணன் மங்களாசாஸனம்.

பூர்ணாஹுதிக்கு முன்தினம் ஸாயங்காலம், வதரியாச்சிரமத்துள்ளான் ஸன்னிதி 'ஸத்ஸங்க' மண்டபத்தில் வேதபாராயணகாரர்களும், திவ்யப்பிரபந்த ஸ்வாமிகளும், கோயில் அதிகாரிகளின் அழைப்புக்கிணங்க ஸ்ரீஜீயரை முன்னிட்டுக் கொண்டு எழுந்தருளினர். அவ்வமயம் வேதபஞ்சாதிகளையும், திருமங்கையாழ்வார் வதரியையும் வதரியுள்ளானையும்பற்றிப் பாடின 20 பாசுரங்களையும் உபய வேதாதிகாரிகள் ஓதினர். அதைத் திருச்செவி சாத்தின ஸ்ரீ நாராயணன் 'நாம் உகந்தோம்! நாம் உகந்தோம்!'' என்றருளி, சன்னிதி கமிட்டியின் கார்யதரிசி மூலம் விசேஷ ப்ரஸாத சன்மானங்களை அனுப்பி மங்களாசாஸனம் செய்தான்!

அப்பேரது பேசிய ஸ்தல ஔத்தரீய தண்டி சன்யாஸி 'வேதாந்த பாரத தேசத்தில் யாவரையும் ஒன்று சேர்க்கும் மந்திரம். அரசாங்கம் ஸம்ஸ்கிருத படிப்புக்கு விசேஷ உத்ஸாஹ மளிக்கவேண்டும். இவ்வளவு, ப்ரகாண்ட வேத பண்டிதர்கள், வதரியில் கூடியிருப்பது அதன் சரித்திரத்திலேயே முதல் தடவையாகும்'' என்று ஸ்ரீ ஜீயர் நடத்திய ப்ரஹ்ம யஜ்ஞத்தின் பெருமைகளை விளக்கினர். பிறகு ஸ்ரீ ஜீயர் ஹிந்தியில் பேசினர். அதன் சுருக்கமாவது: ''வேத அதிகாரிகளின் பொருளாதார நிலைமை சோசநீயம் அவர்களுதவிக்குத் தகுந்த ஏற்பாடுகள் உடனே செய்யவேண்டியது அத்யாவச்யம்'' என்றார். மேலும் சொன்னார், "ஸ்ரீ வதரி சன்னிதி ஸ்ரீ ஆதிசங்கராச்சார் ஸ்வாமிகளால் பலவிதத்திலும் பலப்படுத்தப்பட்டது. அவர் காலத்திற்கு முன்பே வதரியும் தேவப்பிரயாகையும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு பரிக்ருஹீத க்ஷேத்திரங்களாக விளங்கின'' என்று சொல்லி 'கண்டமென்னும் கடிநகர்' என்ற பெரியாழ்வார் பாசுரங்களையும் திருமங்கை மன்னன் வதரி-வதரியுள்ளானைப்பற்றிப் பாடின பாசுரங்களையும்விளக்கி பரக்க உபந்யஸித்தார். கடைசியில் ப்ரஹ்மயஜ்ஞத்தில் கோயில் அதிகாரிகளின் ஒத்துழைப்பை மிகவும் பாராட்டினர்.

## ப்ரஹ்ம யஜ்ஞ பூர்ணாஹுதி.

செப்டம்பர் மாதம் 25-ம் தேதி காலை யாவரும் யாகசாலையில் குழுமியிருந்தனர். ஸ்ரீ ஜீயர் அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு மங்களவாத்தியங்களுடன் ஸ்ரீ வதரிநாராயணன் சன்னிதிக்கு எழுந்தருளி அவனை வழிபட்டு, உடையவர் மடத்திற்கு விடைகொண்டு, திவ்யப்பிரபந்த சேவை சாத்துமுறைகளை முடித்து யாகசாலையில் பிரசன்னமானர். அவ்வமயம் ஒவ்வொரு யாக குண்டத்திலும் அந்தந்த வேதாதிகாரிகள் கடைசி பஞ்சாதி ஓதி ஆஹுதி செய்துகொண்டிருந்தனர். முஹூர்த்த வேளையில் பூர்ணாஹுதி செய்ய ஆயத்த மாயினர். கண்டாமணி ஒலிக்க, வேதியர் குழாம் வேத சாத்து-மந்திரங்களை கம்பீரமான குரலில் ஓத, யாக தீக்ஷிதர்கள் அந்திம நெய்யை அக்னியில் ஆஹுதி செய்தனர். அக்னி ஜ்வாலைகள் வெகு கம்பீரமாய் ஆகாயத்தை அளாவி ஜ்வலித்தன. சூர்ய பகவான் அன்று என்றுமில்லாமல் ஜாஜ்வல்யமாநனாய் பிரகாசித்தது தேவ கணங்களின் பரம திருப்தியை ஊர்ஜிதம் செய்ததுபோலிருந்தது. வதரியின் இருபுறமுமுள்ள

நர பர்வதமும், நாராயண பர்வத சிகரமும் பனியால் மூடப்பட்டு வெய்யிலில் வெள்ளிமலைகளாகக் காட்சி யளித்த அற்புதத்தை என்னவென்று சொல்லுவது!

## அவப்ருத ஸ்நானம்.

ப்ரஹ்ம யஜ்ஞும் முடிந்தது, அவ்வமயம் நம் ஜீயருடைய தேஜோமயமான திருமுக மண்டலத்தை சேவித்தவர்களே பாக்கியசாலிகள். ஸ்ரீ ஜீயரும் மற்றுமுள்ள ஸ்வாமிகளும் உபநிஷத்துக்களை ஓதிக்கொண்டு யஜ்ஞபூர்ண கும்பத்துடன் அவப்ருத ஸ்நானம் செய்ய தப்த குண்டத்திற்கு வீதிவலமாக எழுந்தருளினர். அங்கு நடக்கவேண்டிய சடங்குகளை முடித்து யாவரும் அவப்ருத ஸ்நானம் செய்தனர். யாகசாலை மண்டபத்திற்கு திரும்பிவந்த சில நிமிஷங்களிலேயே விசேஷ ததீயாராதனத்திற்கும் ஸித்தமாயினர்.

## ஸ்ரீ ராமாநுஜகூடத்தில் ஸதஸ்ஸு.

இன்று சாயங்காலம் வித்வான்களுக்கு சன்மானம் வழங்க உடையவர் மண்டபத்தில் ஒரு ஸதஸ்ஸு கூடிற்று. பிரம்ம யஜ்ஞத்தில் பங்கெடுத்துக்கொண்ட எல்லா அதிகாரிகளும் பிரசன்னமா யிருந்தனர். ஸ்ரீ ஜீயர் ஸதஸ்ஸுக்கு தலைமை வகித்து தெலுங்கில் பேசினர். அதன் ஸாராம்சமாவது: "இந்த பிரம்ம யஜ்ஞத்தில் கலந்துகொண்டு அதை சாஸ்திரோக்தமாக பூர்த்திசெய்ய உதவிய உங்கள் எல்லாருக்கும் அடியேனுடைய கிருதக்ஞதை. ரித்விக்குகள் 108 நபர்களை எப்படி இவ்வளவு தூரத்தில் எழுந்தருளச்செய்ய முடியுமென்று யோசித்தோம். பல கஷ்டங்களையும் பொருட்படுத்தாமல் 108—அல்ல 128 ஸ்வாமிகள் இங்கு ஏள்ளினது மிக விசேஷம்! ஒவ்வொரு ஸ்வாமிக்கும் சன்மானம், ரயில் போக்குவரத்து சார்ஜு, சாப்பாட்டுச் செலவு இவை ரூ. 450 ஆகிறது. இதையொட்டி எல்லா வைதிக மடங்களுக்கும், கவர்ன்மென்ட் என்டோமென்ட் போர்டார்களுக்கும் ஆந்திரா கவர்ன்மென்ட் என்டௌமென்ட் போர்டாரின் ஆக்ஞைப்படி திருப்பதி-திருமலை, காளஹஸ்தி முதலிய ஐந்தாறு தேவஸ்தானங்கள் வேதபாராயணகாரர்களை அனுப்பினதோடு அவர்களின் செலவையும் ஏற்றனர், மடாதிபதிகளில் ஸ்ரீ பரகால மடம் ரூ. 200 நன்கொடை யனுப்பி மங்களாசாஸனம் செய்தது பாக்யம்.

பிரம்ம யஜ்ஞத்திற்கு செலவு தோராயமாக வருமாறு. சம்பாவனைகள் ரூ. 25,000, யாகசாலை நிர்மாணச் செலவு ரூ. 10,000, நோடீஸ் முதலிய விளம்பரங்கள் ரூ. 10,000 ததீயாராதன சாமக்ரிகள் ரூ. 25,000 இன்னும் மற்ற சில்லரைச் செலவுகள் உட்பட மொத்தம் ரூபாய் ஒரு லட்சத்திற்குமேல் ஆகிறது. இதற்கு மதருஸ் ஆர்யவைச்ய அசோஸியேஷன், பாதாளம் சந்திரய்யா குடும்பம் ஸ்ரீ வெங்கடேச சுப்ரபாத கோஷ்டி, மதருஸ் மீனாட்சிசுந்திரம் செட்டியார், விஜயவாடா வெள்ளி-தங்க வியாபாரிகள், ஸ்ரீ கூரப்பாடி ராமராவ் முதலிய மஹநீயர்கள்] நன்கொடையாக ரொக்கம், சால்வை, ததியாராதன சாமக்கிரிகள் உட்பட பல விதத்திலும் செய்த உதவியை க்ருதக்ஞதையுடன் தெரிவிக்கிறேன். இவர்கள் எல்லோருக்கும் வேத புருஷனுடைய பரிபூர்ண ஆசி நிச்சயம் உண்டு" என்று ஸ்ரீ ஜீயர் சொற்பொழி வாற்றினர்.

ப்ரஹ்ம யஜ்ஞத்தில் கலந்துகொள்ள உத்ஸாஹம் கொண்டிருந்தும் ஸ்ரீ காஞ்சி ப்ர. ப. அண்ணங்காராச்சாரியர் ஸ்வாமிக்கு ஆரோக்கியக் குறைவால் இது சாத்யமாகவில்லை. அவர் ஒரு விசேஷ ஸந்தேசம் அனுப்பி திருப்தி யடைந்தார். ஸந்தேசத்தை அடியேனுக்கு டில்லிக்கு அனுப்பி, வதரி சென்று ஸதஸ்ஸில் படிக்கும்படி ஆஜ்ஞையிட்டார். பகவத்கிருபையால் அது நடந்தேறியது. ஸந்தேசத்தின் முக்கிய பாகங்களைமட்டும் இங்குக் குறிப்பிடுகிறேன்.

**ஸ்ரீ உ. வே, அண்ணங்கராச்சாரிய ஸ்வாமியின் ஸந்தேசம்.**

"........எம்பெருமானை ஸத்யகாமனென்றும், ஸத்ய ஸங்கல்பனென்றும் நாம் சொல்லிவருவது சாஸ்திர விச்வாஸத்தாலே. அந்த ஸ்ரீமந் நாராயணன் தானே தன்னுடைய ஸத்ய காமத்வ ஸத்ய ஸங்கல்பத்வங்களை உலகில் ப்ரத்யக்ஷமாகக் காட்டுவதற்கென்றே ஸ்ரீமந்நாராயண ஜீயர் ஸ்வாமியாக வடிவு கொண்டானென்றால் இதை அதிசயோக்தியாக ஒருவரும் நினையார். ஸ்ரீ ஸ்வாமி விச்வ கல்யாணார்த்தமாகச் செய்தருளும் கார்ய விசேஷங்கள் அபரிமிதம், அமோகம், அப்ரமேயம்.......ஒருவருடையவும் சிந்தைக்கும் கோசரமல்லாத கார்ய விசேஷங்களை நம் ஜீயர்ஸ்வாமி செய்தருளி வருகிறார்..........(மேலும்)

..........ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி சென்ற ஆடிமீ பௌர்ணமியில் ஸ்ரீ பதரிகாச்ரமம் சேர்ந்து ஆச்ரமோசிதமான சாதுர்மாஸ்யதீக்ஷையை ஸங்கல்பித்து அதன்ஸமாப்தி ஸமயத்தில் ஏழுநாள் இந்த ப்ரஹ்ம யஜ்ஞாநுஷ்டானத்தையும் ஸங்கல்பித்தருளி யிருந்தார். அந்த ஸங்கல்பம் பழுதுபடாமே ஸ்வாமியின் மநோரதத்திற்கு சதகுணமாக நடந்துவருகின்ற அதிசயம் நெஞ்சால் நினைப்பரிது. ஸாதாரணமாக நாலைந்து நபர் வதரிசென்று ஸௌக்கியமாகத் திரும்புவது ச்ரமஸாத்யமென்பதை நாம் சொல்லவேண்டியதில்லை. அப்படிப்பட்ட ஸ்தலத்தில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் வந்து குழாங்கூடி இனிது அநுபவிக்கும்படியான ஸௌகர்யங்களை ஸ்ரீ ஜீயர்ஸ்வாமி செய்தருளி யிருப்பது ஒன்றான ஸத்ய ஸங்கல்பனுக்கும் அரிது என்றால் மிகையாகாது...அடியேனுக்கு சக்தியிருந்தால் அவச்யம் (ப்ரஹ்மயஜ்ஞத்தில்) அந்வயித்திருப்பேன், ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமியின் வாழ்நாளில் நாம் பிறந்திருக்கிறோமே, இதுவே நமது பரமபாக்யம்!"

இப்படி ஸ்ரீ அண்ணங்கராச்சாரியர் ஸ்வாமியின் ஸந்தேசம் வாசித்து முடிந்ததும் ஸ்வாமிகளுக்கு சன்மானங்களும் மந்திராக்ஷதையும் வழங்கப்பட்டன. பிறகு ஸதஸ்ஸு இனிது கலைந்தது. வதரியில் ப்ரஹ்ம யஜ்ஞம் ஸமாப்தியாயிற்று.

*** *** ***

**டில்லியில் ஸ்ரீ ஜீயருக்கும் வேதாதிகாரிகளுக்கும் வரவேற்பு.**

வேதவித்துக்களுக்கு உபராஷ்ட்ரபதி அளித்த கௌரவம்

வதரியிலிருந்து ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி சுமார் 100 வேதப்ராம்மணர்களுடன் அக்டோபர் 4ந் தேதி தக்ஷிணத்திற்குச் செல்லும் மார்க்கத்தில் டில்லி எழுந்தருளினார். தலைநகரில் ரவீந்திர நகர் என்ற காலனியில் ஸ்ரீ உ. வே. R. ராமஸ்வாமி அய்யங்கார் தன் பங்களாவில் யாவரும் தங்க ஏற்பாடு செய்தார்.

அடுத்த தினம் ஞாயிற்றுக்கிழமை விடுமுறை நாளானதால் நூற்றுக்கணக்கான உத்தியோகஸ்தர்கள் ஸ்ரீ ஜீயர் ஸ்வாமியை ஸேவிக்க வந்தனர்.





காலை 10-30 மணிக்கு மத்திய அரசாங்க மந்திரி ஸ்ரீ K. L. ராவ் அவர்களின் விசால பங்களாவில் வேத கனபாடிகளுக்கு ஒரு வரவேற்பளிக்கப்பட்டது. பஞ்சாதிகள் ஓதிய பிறகு ராவ் தம்பதியார் வேதகோஷ்டியை தண்டம் சமர்ப்பித்து பழமும் காணிக்கையும் சமர்ப்பித்தனர்.

பகல் 12 மணிக்கு ஸ்ரீ ஜீயரை முன்னிட்டுக்கொண்டு வேதாதிகாரிகளும் மற்ற பண்டிதர்களும் தேசத்தின் உப ராஷ்ட்ரபதி கனம் பொருந்திய ஸ்ரீ G S. பாடக் அவர்களின் அரண்மனைக்குச் சென்றனர். உபராஷ்ட்ரபதியும் அவர் குடும்பத்தாரும் ஸுஸ்வாகதம் கூறி, யாவரையும் ஆசனத்தில் அமர்த்தினர். வேத கனபாடிகள் ஒவ்வொரு வேதத்திலிருந்தும், பஞ்சாதிகளை ஓதினர். அவைகளை செவியுற்ற கனம் ஸ்ரீ பாடக்கின் கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் உதிர்ந்தது. பிறகு உபராஷ்ட்ரபதியும் அவர் குடும்பத்தாரும் ஸ்ரீஜீயருக்கும் வேதப்ராம்மணர்களுக்கும் காணிக்கை சமர்ப்பித்து திருவடிகளில் வணங்கி இவ்வளவு தூரம் யாவரும் எள்ளினதற்கு க்ருதஜ்ஞதையைத் தெரிவித்தார்.





### சரோஜனி நகரில் வரவேற்பு.

அன்று சாயங்காலம் சரோஜனி நகர் காலனியில் ஸ்ரீ கணேச மந்திரத்தில் வேத பண்டிதர்களுக்கு ஸ்ரீ சங்கர அகாடமியின் சார்பிலும், 'வேதிக் கல்சர் சென்டர்' சார்பிலும் பாராட்டுகளும் சன்மானங்களும் வழங்கப்பட்டன. இக் கூட்டத்தில் டில்லி தமிழ் மக்கள் நூற்றுக்கணக்கில் குழுமி யிருந்தனர். அவர்களில் சுப்ரீம் கோர்ட் ஜட்ஜு ஜஸ்டிஸ் ஸ்ரீ V. ராமஸ்வாமி அவர்களை குறிப்பிடவேண்டும். அடுத்தநாள் ஸ்ரீ ஜீயர் ஸ்வாமியும் மற்றவர்களும் தக்ஷிணதேசத்தை நோக்கி பயணமாயினர். டில்லியில் வேதபண்டிதர்களுக்கும் ஸ்ரீ ஜீயருக்கும் பல சௌகர்யங்களையும் ஏற்படுத்திக் கொடுத்த ஸ்ரீ R. ராமஸ்வாமி அய்யங்கார், ஸ்ரீ R.T. கிருஷ்ண அய்யங்கார் இவர்களின் பக்தி சிரத்தையை ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி பாராட்டினர். *

"லோகாஸ் ஸமஸ்தாஸ் ஸுகிநோ பவந்து."

---

### ஸ்ரீமத். ஜீயர் ஸ்வாமிகளின் கோயிற்பயணம் (P. B. A.)

ஸ்ரீ ஸ்வாமி ப்ரஹ்மயஜ்ஞத்தை வதரியில் முடித்துக் கொண்டு டில்லியில் சில நாட்கள் தங்கிவிட்டு, தம்முடைய ராமதூதன் மூலமாகவே விஜயவாடா வந்து சேர்ந்து அவ்விடத்தில் வருடந்தோறும் வெகுகாலமாக நடத்தப்பட்டு வருகிற விசிஷ்டாத்வைத வித்வத்ஸம்மேளனத்தைத் தம்முடைய ஆத்யக்ஷ்யத்திலேயே ஐந்து நாள் வெகுசிறப்பாக நடத்தி, வித்வான்களை விசேஷமாக ஸன்மானித்தருளி யாத்ராக்ரமத்தில் சென்னை மாநகர் வந்து சேர்ந்து அவ்விடத்தில், பல ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு தம்மால் ப்ரதிஷ்டாபிதமான தேவேந்திரபவன் பர்யாயமான கீதாமந்திரத்தில் இப்போது எழுந்தருளியிருக்கிறபடி. திருவத்யயனோத்ஸவம் ஸமீபித்திருப்பதால் நம்பெருமாள் ஸன்னிதிக்கு எழுந்தருளி அவ்விடத்திலே சில மாதங்கள் தங்கியிருக்கத் திருவுள்ளம் பற்றியிருக்கிறார். ஸ்வாமி எங்கே யெழுந்தருளியிருந்தாலும் " உன்னடியார்க்கு என் செய்வனென்றே யிருத்திநீ" என்று நம்மாழ்வாரருளிச் செய்யும்படியிருக்கும்எம்பெருமானைப் போலவே விச்வ கல்யாணார்த்தமான கார்யவிசேஷங்களையே சிந்தனை செய்து கொண்டிருப்பரென்பது அடியேனுக்கு நெடுநாளைய அநுபவஸித்தம்.

சென்ற ஸம்வத்ஸரத்தில் திருமலையிலெழுந்தருளி யிருக்கும் போதே ஸ்ரீபாஷ்ய பகவத்விஷய பீடஸ்தாபன ப்ரயத்னம் தொடக்கமாகி அது அநுவ்ருத்தமாயும் அபிவ்ருத்தமாயும் இருந்து வருகிறது. இந்த விஷயத்தில் பதினாறுலக்ஷம் ரூபா மூலதனம் சேர்த்து, கார்யக்ரமங்களைத் தொடங்கவேணுமென்பது ஜீயர் ஸ்வாமியின் திருவுள்ளம். பதினாறு லக்ஷமன்று, பதினாறு கோடி சேகரிக்க வேணுமென்று ஸ்வாமி திருவுள்ளம் பற்றினாலும் ஆகாததன்று. உண்மையில் இப்பெருமைக்குக் காரணம் ஸ்ரீ ஸ்வாமியின் அந்த:கரணத்தின் பரிசுத்தியொன்றே. ஸர்வாத்மநா ஸ்வார்த்த நைரபேக்ஷ்யம் ஸ்வாமியிடத்திற்போல் அந்யத்ர காண முடியாது. ஸ்வாமியை க்ருஹஸ்தாச்ரமத்திலிருந்தே முப்பத்தைந்து வருடங்

களுக்கு மேலாகவே அடியேன் அறிவேன். அப்போதே ஆங்காங்கு விசிஷ்டாத்வைதமதப்ரசாரக ஸங்கங்களை யேற்படுத்துவதும், வித்வான்களை உத்ஸாஹப்படுத்துவதும் பஹுமானிப்பதும் தவிர வேறு காரியத்தில் ஸ்வாமிக்குக் கண்ணோட்டம் கிடையாது.

கோதாவரி ஜில்லா நரஸாபுரத்தில் எழுந்தருளியிருந்த ப்ரசண்ட வித்வச் சக்ரவர்த்தியான ஸ்ரீமதுபயவே. மந்தஸா ராமாநுஜா சார்யஸ்வாமி ஸன்னிதியிலே குருகுல வாஸம்பண்ணி நியாய வேதாந்தங்களை வரியடைவே கற்று ஸம்ப்ரதாய ரஹஸ்யங்களையும் அவர் பக்கலிலேயே அதிகரித்தவர் ஜீயர் ஸ்வாமி. எந்த தேசத்திற் கெழுந்தருளினாலும் நாலேநாளில் அந்த தேசத்துபாஷையை யறிந்து கொண்டு பேசுவர். எல்லாவற்றுக்கும் மேலானபெருமை—எப்படிப்பட்ட உத்துங்காதிகாரிகளும் ஸ்வாமியைக்கண்டு நாலுவார்த்தை பேசினவாறே கைவழி மண்ணாயிருந்து தாஸாநுதாஸராயிருப்பர்கள்.

ஸ்ரீ ஸ்வாமி இதுவரையில் நடத்தியருளின காரியங்கள் ஏகதேச மென்னும்படி இனிமேல் நடத்தியருளப் போகிற அமோகமான காரியங்களை உலகம் கண்டு களிக்கவேணும். முடிவாக, நம்பெருமாள் ஸன்னிதியில் அடியேனுடைய நிகழ்ச்சிகளை விஜ்ஞாபித்துத் தலைக்கட்டுகிறேன். நம்பெருமாள் ஸன்னிதியில் பகற்பத்தின் தொடக்கத்திற்கு முன்னாள் (இரவு) திருநெடுந்தாண்டக ஸேவையென்பது ப்ரஸித்தம். 8-12 69 திங்கட்கிழமை யன்று அது. அன்றைக்கே அடியேன் கோயில் சேர்ந்து 15-12-69 திங்கட்கிழமை வரையில் அங்கிருந்து உத்ஸவம் ஸேவிக்க பாக்கியம் பெற்றிருக்கிறேன் 9-12-69 முதலாக 14-12-69 அளவாக ஆறுநாட்களில் தினந்தோறும் இரவு 7-30 தொடங்கி 9-30 வரையில் ஸ்ரீ ஜீயர்ஸ்வாமிகளின் அக்ராஸனத்தில் உபந்யாஸங்கள் நடைபெறும். இடம் மேலைச்சித்திரை வீதியில் நெ. 75 பாரதீய பூர்வசிக ஸ்ரீ வைஷ்ணவ ஸபா நிலயம். உபந்யாஸ விவரம் வருமாறு:—

| தேதி | மணி | விஷயம் |
|---|---|---|
| 9-12-69 செவ்வாய் | இரவு 7-30 to 9-30 | நாதமுனிகளும் நம்மாழ்வாரும் |
| 10-12-69 புதன் | ,, | ஆளவந்தாரும் ஆழ்வார்களும் |
| 11-12-69 வியாழன் } 12-12-69 வெள்ளி } | ,, | எம்பெருமானாரும் ஆழ்வாரும் (இரண்டு நாள்) |
| 13-12-69 சனி | ,, | ஆழ்வான்பட்டர்–ஆழ்வார் |
| 14-12-69 ஞாயிறு | ,, | மணவாளமாமுனிகளின் வைபவம். |

சென்னை பரமார்த்தபூஷணம் ஸ்ரீமான். நாதெள்ள ஸம்பத்து செட்டியாரவர்களின் சதாபிஷேக மஹோத்ஸவம்.



சென்னையில் ஆர்யவைச்ய குலதிலகராய் விளங்கும் பிரபலரத்ன வியாபாரி யான ஸ்ரீமான் பரமார்த்தபூஷணம். நாதெள்ள ஸம்பத்து செட்டியாருடைய பௌத்ரனுக்கு புத்ரஜன்மோத்ஸவம் நிகழ்ந்தது காரணமாக (12-10-69) தேதியில் தமது இல்லத்தைச் சேர்ந்த மஹாமண்டபத்தில் சதாபிஷேக மஹோத்ஸவம் வெகுசிறப்பாக நடைபெற்றது. உற்றூர் உறவினர் பண்டிதர்கள் ஜட்ஜ்கள் அட்வகேட்டுகள் பிரபலவியாபாரிகள் முதலிய பலநூற்றுக்கணக்கான பெரியார்கள் விஜயம் செய்து சிறப்பித்தார்கள்.

அனேக தர்மஸ்தாபனங்களில் பங்கு கொள்பவரும் ஸ்வயம் தார்மிகருமான நம் பரமார்த்த பூஷண செட்டியார் நீடூழிவாழ்க. .... ....

---

## சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு

ஸ்ரீ ராமாநுஜன் 250 ல் கண்ட நம்முடைய கோரிக்கையை ஒருவாறு நிறைவேற்றின சந்தாதாரர்கள் ஏறக்குறைய நூறு பேர்கள் மட்டுமேயென்னலாம். மற்றவர்களுக்கு அடுத்த பத்ரிகை அனுப்பப்படமாட்டாதென்பதை இதனால் தெரிவித்துக்கொள்ளுகிறோம். கடைசியாக நிகழும் டிஸம்பர் மாத முடிவுவரை அவதி தருகிறோம்.

ஸ்ரீ ராமாநுஜன் கார்யதர்சி.